உ

ஸ்ரீ குருப்யோ நம:

ஜயஜய சங்கர! ஹரஹர சங்கர!!

# சபரிமலை யாத்திரை

ஸ்ரீ ஐயப்பன் மகத்துவம்
ஸ்ரீ ஐயப்பன் ஸ்தோத்திரங்கள்
ஸ்ரீ ஐயப்பன் ஸுப்ரபாதம்
ஸ்ரீ ஐயப்பன் பூஜாகல்பம்



ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாத வேத ஸபா,

திருவல்லிக்கேணி :: சென்னை-5

1971] ஆகஸ்ட் வெளியீடு [ஞானயக்ஞம்

# சபரிமலே யாத்திரை

## அணிந்துரை

அன்பர்கள் ஆண்டு தோறும் ஆன்ம சாந்திக்காக ஐயன் ஐயப்பன் திருவடியை துதித்துப் பாடி மண்டல நோன்பு கொண்டு மலேயேறி தரிசித்து வருகிருர்கள். இவ்வழி பாட்டினே முறையாக எளிதில் எவரும் புரிந்து கொள்ளும் தன்மையில் இப்புத்தகம் எடுத்து இயம்புகின்றது. இதனே அன்பர்கள் ஓர் முறை படித்தார்களேயாளுல் சபரிப் பயணத்தை எளிதாகப் புரிந்து கொள்வார்கள்.

ஆற்றல் மிகுந்த அன்பர்கள் அறிவின் வளர்ச்சிக்காகவும், ஆன்ம சாந்திக்காகவும், அருமையான மூலிகைகளின் தென்ற லுக்காகவும் சபரிமலேப் பிரயாணத்தைக் கைக் கொள்ளுதல் நலம்.

### ஐயப்பா சாமியே சரணம் ஐயப்பா !

சத்தியத்திற்கும், சர்ச்சைக்கும் அப்பாற்பட்ட "ஐயப் பன்" சபரிமலேயில் சன்னிதானம் கொண்டுள்ளான். காண விரும்புவோர், கனிந்த உள்ளத்தினின்று நெகிழ்ந்துவரும் பற்பல பெயரிட்டு பெருமிதத்தோடு கூக்குரலிட்டு, குழுமிவரும் கூட்டத்தோடு கும்பிடுகின்ருர்கள். இவ்வரிய தரிசனம் ஆண்டு தோறும் அதிகரித்துக்கொண்டுள்ளது என்பதை அங்குச் செல்லும் அன்பர்கள் உணர்வார்கள்.

தவத்தில் உயர்ந்தோனும் தருமத்திற் சிறந்தோனுமாகிய சிவனும், பண்பிற் பெரியோனும், காக்கும் கருணே உள்ள முடையவனுமாகிய மாலும் ஒன்றுபட உதித்த சத்புருடன் "*சபரிமலே ஐயப்பன்*".

மங்கல நாளாகிய பொங்கல திருநாளிலே தரிசனம் செய்ய, ஓர் மண்டலம் உரிய நோன்பினைக் கொண்டொழுகித் தொழுது தொழுது, தொலைவைக் கடந்து, ஆடிப்பாடி ஆனந்த நீர் மல்கி, அருபத்திலுள்ளவனை சொருபமாகக்கொண்டு படி வழியாக பதினெட்டு படி தாண்டி பாவவினை தீர்க்கவல்ல தினகரனைக் காண திரள் சூழ கண்ணுறுகின்றனர்.

மலைச்சாரலின் இயற்கையிலே, இணையாகப் போகுங்கால், பக்தி நிறைந்த சொற்களும், பண்புற்றவர்களின் சேர்க்கையும் கரடுமுரடான பாதையையும், உடலுக்கு உண்டான பிணியையும் போக்கி சன்மார்க்கத்திலே ஈடுபாடுடையதாகச் செய்கின்றது.

ஆற்றல் அறிவில் சிறந்தோனும், இயற்கையைக் கண்டு களிப்பார்கள். அக்களிப்பிற்கு உகந்த இயற்கையினை இயக்கியவர் யார்? இவ்வினவிற்கு யாவரும் ஒப்பிணைத்தரும் ஒருவன் உண்டு. அவ்வொருவனைக் காண செல்வோர் பலர். அவர்களில் நாமும் ஒருவனாகி "ஐயப்பனை" வாழ்நாளில் ஒரு முறையாயினும் கண்டு, காணக் கடிதான இயற்கையின் வனப்பையும் காணவேண்டும் என்பது இவ்வேளியேனின் விருப்பம். அன்பர்கள் ஆன்ம திருப்திக்கும், அறிவின் வளர்ச்சிக்கும், இயற்கையின் எழிலுக்கும் பாத்திரர்களாக விரும்புவார்கள் என்பது திண்ணம். திடமான உடலும், உள்ளமும் திறம்பட்ட பண்பும் அடைவார்கள் அவ் "*ஐயப்பன்*" திருவருளால்!

# சபரிமலைப் பயணம்

முன்னாள் போன்று "சபரிமலைப்" பிரயாணம் தற்போது அவ்வளவு கடினமானதல்ல. காடுகள் நிறைந்திருந்தும் பாதைகள் ஒருவாறு அமைந்துள்ளது. காட்டு விலங்குகளின் தொந்திரவும் அவ்வளவாக இல்லை.

## குருவை அணுகுதல்

பொதுவாக போக எத்தனிக்கும் அன்பர்கள் ஐயப்பனை வழிபடுபவரும், பலமுறை போய் பழக்கமுள்ளவருமான ஒருவரை குருவாக நியமித்துக் கொள்ள வேண்டும். அக் குருவின்

கட்டளைப்படியே மாலை (துளசி அல்லது ருத்திராக்ஷை) தரித்து ஓர் மண்டலம் (41 நாள்) நோன்பு கொண்டு ஐயப்பனுக்கு தினமும் சரணம் சொல்லித் தொழுவார்கள்.

நோன்பு முடியும் வரை குருவின் கட்டளைப்படியே நடக்க வேண்டும் என்று உறுதிகொள்ள வேண்டும். ஆகவே, நோன்பு கொண்டுள்ளவன் ஓர் ஒழுங்கோடு நடப்பான் என்பது திண்ணம்.

எக்காரியத்திற்கும் ஓர் குரு தேவை. அதேபோன்று குருப் பதவி வகிப்பவர் தங்களது சீடர்களின் நலனையே பாவித்து ஐயனைப் பூஜித்து வருவார். ஆகையால் பிரயாணம் முடியும் வரை எல்லோரும் ஒன்று பட்டு ஒழுங்காக குருவின் கட்டளைக்கிணங்கி வீடு திரும்புவார்கள். நோன்புகொண்டொழுகும் நாட்களில் எத்தகைய வேறுபாடுகளோ, கஷ்டங்களோ குருவினிடத்தில் கொள்ளக் கூடாது.

சன்மார்க்கத்திற்கு, சிறந்தமுறை ஆண்டவனின் திருப்பெயரும், அவனது ஆடியார்களின் கூட்டங்களுமாகும். ஆகவே, ஆசான் (குரு) ஒருவனை வகித்து அவனது வாயிலாக ஆண்டவனைத் தொழுது அனைவரோடும் ஆன்ம சாந்தி அடையவேண்டும்.

## ஐயப்பனின் இருப்பிடம்

கேரள நாட்டில் பந்தளம் திட்டை மாவட்டத்தில் ***சபரிமலை*** இருக்கின்றது. அம்மலையில்தான் "ஐயப்பன்" குடி கொண்டுள்ளார். மலைக்காடுகளையும், காட்டாற்றினையும் கடந்து சுவாமியைக் காணச் செல்ல வேண்டும். "***சுவாமியே சரணம் ஐயப்பா***" என்றும் பலர் பலவிதமாக சரணம் கூவித் துதித்துச் செல்லும் குதூகலத்தில் நாமும் கலந்து செல்ல நமக்குக் காடுகளையும் மலைகளையும் கடக்கும் கஷ்டங்கள் ஏதும் தெரியாமல் துரிதமாகப் பக்த கோடிகளுடன் செல்லலாம்.

## மாலை அணிவது

சபரிமலைக்குப் போக நினைத்துள்ளவர் அவர்களுடைய பெற்றோர் உறவினர்களுடைய சம்மதம் பெற்று, சபரிமலை சென்று, பலமுறை தரிசனம் செய்து வந்த பக்தர் ஒருவரை

தன் குருவாக நியமித்துக் கொள்ள வேண்டும். கார்த்திகைத் திங்கள் முதல் தேதி காலையில் நீராடி குருவிற்கு வணக்கம் செய்து மாலைவாங்கி அணியவேண்டும். இவ்வேற்பாடு குடியிருக்கும் வீட்டிலோ, கோவிலிலோ, பஜனைக்கூடத்திலோ நடத்தலாம். வீடாயிருந்தால் நல்ல சுத்தியாக வைத்துக் கொள்ள வேண்டும்.

கார்த்திகை முதல்தேதி முடியாவிடில் அடுத்துள்ள நல்ல தொரு நாளில் மாலை அணியலாம். குருஸ்தானத்திற்கு ஒருவரும் கிடைக்காவிடில் தாய் தந்தையர்கள் முன்னிலையில் இருதய சுத்தியுடனும் சரீர சுத்தியுடனும் ஆண்டவனுக்கு ஆராதனை நடத்தி மாலையணியலாம். போட்டுக் கொள்ளும் மாலை துளசிமாலையாகவோ, ருத்திராட்ச மாலையாகவோ இருக்கலாம். வசதியுள்ளோர் தங்கமாலையாகவோ அல்லது வெள்ளி மாலையாகவோ போட்டுக் கொள்ளலாம்.

நாகரீகமடைந்த இந்நாளிலே, குறித்தநாள் விரதம் (நோன்பு) இல்லாயலும், மாலை அணியாமலும் சபரிமலைக்கு செல்கிறார்கள்.

இது ''பசித்தவன் உண்ணும் உணவுக்கும், பசியாதவன் உண்ணும் உணவுக்கும்'' உள்ள வேறுபாடு போன்றதாகும். ''வெயிலில் சென்றவனுக்குத்தான் நிழலின் அருமை'' தெரியும். அதேபோன்று ஓர் மண்டலம் (41 நாள்) நோன்பு கொண்டு சதா சரணம் சொல்லி ஐயப்பனைத் தரிசிக்க ஆவலுடன் காத்திருந்து காணும் காட்சிக்கும் சாதாரணமாகச் சினிமாப்படம் போன்று காணும் காட்சிக்கும் வேறுபாடு பல வுள்ளன. அங்குச் செல்லும் அன்பர்கள் இதனை அறிவார்கள்.

## நோன்பு கொண்டபின்

நோன்பு கொண்ட 41 நாட்களில் பிரதிவாரம் சனி, புதன் கிழமைகளில் வீட்டிலோ பஜனைகூடத்திக்லோ அல்லது கோயி லிலோ பஜனைகளில் கலந்துகொள்ள வேண்டும். சக்திக்கேற்ற வாறு பூஜைகள் செய்யலாம். பூஜைக்கு முக்கியமாகதீபம் ஏற்ற வேண்டும். அந் நாட்களில் சாதுக்களுக்கு அன்னதானம் செய்வது மிகவும் நல்லது. முக்கியமாக சதா சர்வ காலமும் ''**சரணம்**'' சொல்லி வருவது முக்கியமாகும். இதுவே மனதை ஒன்று படுத்துவதாகும்.

## இருமுடி கட்டு நிறைப்பது

நோன்பு கொண்ட பக்தர்கள் சிலர் அன்னதானம், மேள தாளங்களோடு கட்டு நிறைப்பார்கள். முதல் முதல் போகும் பக்தர்கள் கட்டு நிறைப்பதை, நியமித்துள்ள குருவின் முன்னிலையில் நிறைப்பது நல்லது. முதல் தடவை புதிதாகப் போவதால் கட்டு நிறைப்பதில் தவறுகள் ஏதும் நேராவண்ணம் குருவின் சொற்படி நிறைப்பது நல்லது. சிலர் தங்கள், தங்கள் வீடுகளில் சுவாமிகளின் படத்திற்கு பூஜை செய்து பிறகு கட்டு நிறைப்பதும் உண்டு.

## மூன்று முழம் இருமுடிப்பை

இருமுடிப்பையினுடைய நீளம் மூன்று முழம். அகலம் அதிகமான துணிவாங்கி நீளத்தில் மடக்கி நடுவில் ஒரு அடி நீளம் விட்டு மற்ற இடத்தில் தைத்திருக்கும்.

## இருமுடிக்கட்டு

மேற்கூறிய பையின் ஒருபாகத்தில் நெய், தேங்காய், பூஜை சாமான்கள், காணிப்பணம், கற்பூரம் நிறைப்பார்கள். அதற்கு முன்கட்டு என்று பெயர். மற்றப் பாகத்தில் பக்தர்களுக்கு வேண்டிய அன்ன ஆகாராதிகளுக்கு வேண்டிய சாமான்களையும் நிறைப்பார்கள். இதற்கு பின்கட்டு என்று பெயர்.

## கட்டு நிறைப்பதன் முறை

உற்றார் உறவினர் சூழ குருவின் சொல்படி தெய்வ வழிபாட்டின் பிறகு நல்ல முற்றின தேங்காய் ஒன்றை எடுத்து அதன் கண்ணைத் திறந்து இளநீரை வெளிப்படுத்தி சுத்தமான பசு நெய்யை உருக்கி, அத்தேங்காயின் திறந்த கண் வழியாகச் செலுத்தி பிறகு கார்க்கினால் இறுக மூடி விடவேண்டும். அதிலிருந்து நெய் கசிந்து வழியாதபடி இருக்க வேண்டும். ஆகையால் மெழுகு, அல்லது கோதுமை அல்லது உளுத்த மாவினால் கார்க்கைச் சுற்றி அடைத்து விடவேண்டும். இத் தேங்காயுடன் கால்படி பச்சரிசி, ஆழாக்கு பயத்தம்பருப்பு, தாம்பூலம், கற்பூரம் ஊதுபத்தி, பன்னீர், எலுமிச்சம்பழம், கற்கண்டு, ஏலம், காணிக்கைப் பணம் முதலானவைகளையும்

ஒரு பக்கமுள்ள பையினுள் வைக்கவேண்டும். இத்துடன் ஐயப்பன் சன்னதியில் வடபுறமுள்ள மஞ்சமாதாவுக்காக மஞ்சள், குங்குமம், பழம், கற்பூரம் முதலானவைகளையும் போடவேண்டும். இவைகளையன்றி சிதறுகாய் இரண்டு, சர்க்கரைப் பொங்கல் செய்ய வேண்டிய சாமான்களையும் வைக்கவேண்டும்.

மற்றொரு பையில் தங்களுக்கு வேண்டிய பலகாரங்கள், ஆகாரங்கள் செய்வதற்கு வேண்டிய சாமான்கள் (அரிசி, பருப்பு, எண்ணெய், புளி, தேவையான காய்கறி அதை அரிவதற்கு கத்தி, விறகுவெட்ட அறிவாள், காப்பித்தூள், சர்க்கரை) முதலியவைகளை நிறைக்க வேண்டும்.

முன் கட்டு நிறைக்கும் போது ஒவ்வொரு சாமான்களையும் எடுத்து சரணம் சொல்லிக் கொண்டே நிறைக்க வேண்டும். இவ்விரு பக்கமுள்ள பைகளையும் நிறைத்த பிறகு இதற்கு இரு முடி கட்டு என்று சொல்லுகிறோம். இவ்விரு முடிகட்டை பெற்றோர்களினாலோ, பெரியோர்களினாலோ, குருவினாலோ தலையில் தாங்கி அவர்களது ஆசிபெற்று புறப்படும்போது சிதறுகாய் உடைத்துவிட்டுத் திரும்பிப் பாராமல் பிரயாணத்திற்குப் புறப்படுவார்கள்.

இவ்விரு முடிகட்டை கீழே இறக்கி வைக்கவேண்டுமானால் சுத்தமான இடத்தில் கம்பளியோ புதிய பாயையோ விரித்து மற்றோர் ஐயப்ப பக்தரைக் கொண்டு இறக்கி வைக்கவேண்டும். அதேபோலவே பிறகு தலையில் எடுத்துவைக்கும்போதும் ஐயப்ப பக்தரைக் கொண்டு தலையில் வைத்துக்கொள்ள வேண்டும். இருமுடிக்கட்டை வெயிலில் படாமல் ஜாக்கிரதையாக எடுத்துச் செல்லல் வேண்டும்.

## சபரி யாத்திரை

யாத்திரை செய்கையில் வழியே காணும் ஒவ்வொரு கோவில்களையும் தரிசித்து எருமேலி செல்லவேண்டும். சிலர் வண்டிப் பெரியாறு பாதை வழியாகச் செல்வார்கள். இவ் வழியே சென்றால் 12மைல் தான் நடந்து செல்லவேண்டிவரும். 42 மைல் நடந்து செல்லும் எருமேலிப் பாதை தான் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். * கன்னி ஐயப்பன்மார்கள் எருமேலிப் பாதை வழியாகத்தான் செல்லவேண்டும்.

---

* *முதன் முதல் செல்லும் பக்தர்கள்*

## எருமேலி

பக்தர்கள் எல்லோரும் இங்குதான் வந்து தங்கிச் செல்வார்கள். விலங்குகள் நிறைந்த அவ்வனத்தினூடே பக்தர்கள் பக்திப் பரவசமாக, ‘‘சுவாமியே சரணம் ஐயப்பா’’ என்று சொல்லிச் செல்லும் காட்சிகள் கண் கொள்ளாக் காட்சி யாகத் தென்படும். அதனை எடுத்து எழுதுவதற்கும் சொற்களே போதாது. ஊற்றின் காலஅளவையும், தன்மையையும் கணக் கிட யாரால்தான் முடியும்! அவ்வாறிருக்கையில் கண்ணால் காண இயலாத உள்ள ஊற்றின் தன்மையை எவராலும் வர்ணிக்க முடியுமா ?

பல்வேறு பகுதிகளிலிருந்தும் ஐயப்ப பக்தர்கள் வந்து கூடு கிறார்கள். அங்கு ஓர் ஐயப்பன் கோயில் உள்ளது. இது அரசாங்க மேற்பார்வையில் உள்ளது. இக்கோவிலிலிருந்து ½ மைல் தொலைவில் எருமேலி பேட்டை என்ற இடம் உள்ளது. அங்கு ஐயப்பனின் உயிர்த் தோழனை வாவரு சுவாமியின் கோயிலுமுள்ளது. முகமதியர்கள் இங்கு அதிகம்.

மார்க்ழிக் கடைசியில் வாவரு சுவாமியின் திருவிழா நடக்கும். வாவரு சுவாமி ஐயப்பனின் உண்மையான நண்ப ரும், சன்னியாசியுமாவார். முகமதியர்களும், இந்துக்களும் ஒற்றுமையுடன் வசிக்கிறார்கள். அங்குள்ள ஐயப்பன் வேடுவ ரூபத்தில் காட்சியளிக்கிறார். அங்கு நடக்கும் திருவிழாவை விரதம் எடுத்துக் கொள்ளாதவர்களும் பார்க்க வருகிறார்கள். அரை மைல் தூரத்திலுள்ள எருமேலி பேட்டையில் நடக்கும் ஆடல் பாடலை பார்க்க வருவோருமுண்டு.

## பேட்டைத் துள்ளல்

முன்னர் மார்கழி மாதம் 27-ந் தேதி முதல் பேட்டைத் துள்ளல் ஆரம்பமாகும். விருதம் பூண்ட ஐயப்ப பக்தர்கள் அனைவரும் பேட்டையில் நடக்கும் ஆட்டத்தில் கலந்து கொள்வார்கள். வயது முதிர்ந்தோர், மற்றும் சக்தியில்லாத வர்கள் கண்டு களிப்பார்கள். பக்தர்கள் மூன்று கஜம் நீள முள்ள கொம்பு வாங்கிக்கொள்வார்கள். ஓர் கம்பளியை விரித்து அதில் காய்கனிகளை நிறையவைத்து அதனைக் கொம் பின் நடு பாகத்தில் கட்டி இருபுறமும் இருவர் தூக்கி ஆடத்

தொடங்குவார்கள். மற்றவர்களும் தங்கள் வசமுள்ள கொம்புகளைக் கொண்டு கரி, குங்குமம், விபூதி முதலியனவைகளைத் தரித்துக் கொண்டு ஆனந்தத்தோடு கூத்தாடுகிறார்கள். அவர்கள் ''ஐயப்பன் திந்தகத்தோம், ஸ்வாமியே திந்தகத்தோம்'' என்று மெய்மறந்து, மேனி சிலிர்க்க ஆரவாரம் செய்து ஆனந்தக் கூத்தாடுவார்கள். அவர்கள் ஆனந்தக் கூத்தாடிக்கொண்டே, அங்குள்ள ஐயப்ப சுவாமியையும், வாவரு சுவாமியையும் வலம் வந்துகொண்டு எருமேலி சன்னதிக்குச் செல்வார்கள். இவ்வாறு பேட்டையிலிருந்து எருமேலி வருவதை ''சுவாமி வேட்டையிலிருந்து திரும்பி வருவதாக'' நினைவு கொள்ளுதலாகும். பிறகு எருமேலிலுள்ள கோவிலை மூன்று முறை வலம் வந்து கூத்தாடுதலை முடிக்கிறார்கள். இதற்குத்தான் **பேட்டைத் துள்ளல்** என்று பெயர். இவ்வாட்டத்தை அம்பலப் புழையைச் சேர்ந்தவர்கள் ஆரம்பித்தால் கோவிலின் மேற்கே கருடன் பறந்துகொண்டிருக்கும். அவர்களின் ஆட்டம் அவ்வளவு நேர்த்தியாக இருக்கும். பேட்டையாடல் முடிந்த பிறகு, இருமுடிக் கட்டைச் சுமந்து கொண்டு வனப்பிரயாணத்தை ஆரம்பிக்கிறார்கள்.

## வனப் பிரயாணம்

எருமேலியிலிருந்து $2\frac{1}{2}$ மைல் தொலைவில் பெரும்தோடு உள்ளது. அதனைக் கோட்டை வாசல் என நினைத்து சரணம் சொல்லி அங்கிருந்து, பேரூர் தோட்டிலுக்கு (வாய்க்கால்) செல்ல வேண்டும். அதன் இரு புறங்களிலும் மரங்களும் மூலிகைச் செடிகளும் அடர்ந்து வளர்ந்திருக்கும். பக்தர்கள் அங்கு நீராடி அரிசி மாவு, மலர்களைத் தூவிச் செல்ல வேண்டும். இங்குதான் ஐயப்பன் வனத்தில் நடந்த காலத்தில் தன் நண்பர்களுடன் களைப்பாறியதாகக் கூறுகிறார்கள். அதன்பின் பிரயாணத்தைத் தொடங்கி *காலைக்கட்டு* என்ற இடத்துக்குப் போகவேண்டும். இங்கிருந்து *அழுதா நதி* $1\frac{1}{2}$ மைல் தொலைவிலுள்ளது.

ஐயப்ப சுவாமி தாம் வதைத்த மகிஷியை, தேவலோகத்திலிருந்து வாலைப் பிடித்துச் சுழற்றி எரிய, அவள் அழுது கொண்டே இந்நதியில் விழுந்ததால், இந்நதிக்கு அழுதாநதி என்று பெயர்வரலாயிற்று. அன்றிரவு மேள தாளங்களும், பஜனைகளும் நடத்தி ஐயப்ப சுவாமியை உளமாற வாயாற வணங்கி, வழிபாடுகள் நடத்தி மறுநாள் அதிகாலையில் அழுதா

நதியில் நீராடி அங்கிருந்து கல் ஒன்று எடுத்துக் கொண்டு புறப்படுகிறார்கள். வழி மிகவும் ஏற்ற முள்ளதாக இருக்கும். இம்மேட்டினைக் கடக்கும்போது கல்லிடும் மேடு என்ற இடம் ஒன்றுள்ளது. அங்குதான் அழுதா நதியில் அழுதுகொண்டே விழுந்த மகிஷியை அடக்கம் செய்தார்களாம். பக்தர்கள் அழுதையில் நீராடி எடுத்து வந்த கல்லை இம்மேட்டின்மீது எறிந்து செல்கிறார்கள்.

அழுதா மேடு ஏறி வந்த களைப்பை உடும்பாறை என்ற இடம் அடைந்து களைப்பாற்றிக் கொள்கிறார்கள். அதன் பின் அதிகாலையில் புறப்பட்டு கரிமலைத்தோடு வருகிறார்கள். இங்கும் வழி ஏற்றமாக உள்ளபடியால் நடந்துசெல்வது கஷ்ட மாகத்தான் இருக்கும். இவ்வளவு உயரமுள்ள இம்மேட்டிலும் வியக்கத்தக்கவாறு ஓர் குளமும் ஓர் கிணறும் உள்ளது. இங்கு சின்ன கடுத்த சுவாமி கரிமலை அம்மன் என்னும் வன துர்க்கை சன்னதி இருக்கிறது.

இக்கரிமலை மேட்டிலிருந்து இறங்கிச் செல்லுகையில் சிறு யானை வட்டம், பெரு யானை வட்டம் என்ற இடங்கள் உண்டு. இவ்விடங்களில் யானைக் கூட்டங்கள் வந்து தங்கும். பக்தர்கள் போடும் "சுவாமியே, சரணம் ஐயப்ப" என்ற பக்த கோஷங்களை கேட்டதும் அவைகள் அங்கிருந்து போய் விடும். அதன் பின் பிரயாணத்தைத் தொடர்ந்து பம்பை நதிக் கரையை அடைகிறார்கள்.

இவ்வாற்றங்கரையில்தான் "அரிஹரசுதன்" (ஐயப்பன்) குழந்தை வடிவத்துடன் பந்தள நாட்டரசனுக்குக் கிடைத்தார்.

## பம்பை நதி

இப்பம்பை நதி ஓரம் அன்று தீபாவளி தினம் போன்று காட்சியளிக்கும். பக்தர்கள் சுற்றிலுமுள்ள காட்டில் கிடைக்கும் கொம்புகளை வெட்டி எடுத்து கூடாரம் போட்டுக்கொண்டு, தீமூட்டியும், ஜோதி விளக்கேற்றியும், வாணவேடிக்கையுடனும் மேளதாளங்களோடும், பஜனை செய்தும் சரணம் சொல்லியும் பொழுதினைக் கடத்துவார்கள். அதனை நாட்டில் பல பாகங்களிலும் கொண்டாடும் தீபாவளிப் பண்டிகைக்கு ஒப்பிடலாம். இயற்கையில் ஊடே இவ்வரிய காட்சியைக் காண்பவர்கள், அவர்கள் ஆயுள் முடியும் வரை அதனை

மறக்கவே முடியாது. பக்தர்கள் ரதம் போன்றவைகளைச் சிறு குச்சிகளைக் கொண்டு செய்து எண்ணைத்திரியோ, மெழுகு வர்த்தியோ அதனில் ஏற்றி ஆற்றில் மிதக்க விடுவார்கள். அவைகள் வரிசையாக மிதந்து செல்லும்போது மிகவும் அழ காக இருக்கும். இப்படியாக மிதந்து செல்லும் விளக்குகளைத் தான் **பம்பை விளக்கு** என்று சொல்கிறார்கள். இவ்வித மான வேடிக்கைகளைப் பார்த்துக் கொண்டே இரவு முழுதும் கழித்திடுவார்கள்.

மறு நாட்காலை பம்பை ஆற்றில் நீராடி, பிதுர் கர்மாக்களைச் (தெவசம்) செய்கிறார்கள். பிறகு ஆகாரம் தயார் செய்து சாப்பிடுகிறார்கள். அங்கு எல்லோரும் கூடிச் சாப்பிடுவது ஓர் விருந்திற்கு ஒப்பாகும். பொதுவாக எருமேலிபேட்டை ஆடலில் வாங்கிய காய்கறிகளை இங்கு கொணர்ந்து சமைத்து ஆண்ட வனுக்கு சமர்ப்பித்து சாப்பிடுகிறார்கள்.

ஆகாரத்திற்குப் பிறகு குருதட்சணை கொடுத்து விட்டு (மார்கழி 3ம்-ந்தேதி) சுவாமி சன்னிதானத்திற்கு பயணமாகி றார்கள். போகும் வழியில் பந்தள மகாராஜன் கோவில் இருக் கிறது. அதனை தரிசித்து நீலிமலை ஏறிச் செல்ல வேண்டும். அப்படி ஏறும் போது அப்பாச்சிக் குழி, இப்பாச்சிக் குழி, என்ற இடங்கள் உண்டு. அதில் அரிசி, சர்க்கரை உருண்டை களை வாங்கிப் போடுவார்கள். இங்கு ஐயப்பனின் கட்டளைப்படி வனதேவதைகளை கடுரவன் அடக்கி வைத்திருப்பதாக முன் னோர்கள் வாக்கு. இவ்வப்பாச்சி மேட்டிலிருந்து இரண்டு மைல் தொலைவில் சபரி தவம் செய்த இடம் (அகலமான பாறை) தென்படும். அங்கு சூட தீபாராதனை செய்துசெல்வது வழக்கம். பிறகு பதினெட்டாம் படி நோக்கி நடந்து செல்கிறார்கள். வழி யில் சரங்குத்தி ஆல்தரை காணப்படுகிறது. இந்த மரத்தில் முதன் முதலாகப் போகும் பக்தர்கள் தாங்கள் வாங்கி வைத் திருக்கும் சரக்கோலை குத்திவிட்டுச் செல்கிறார்கள்.

நீல வானத்தினடியில் நிலவியுள்ள வனப் பிரதேசம் கடந்து கருத்திற்கும் ஓர் இயற்கையான நல்ல விருந்தளித்து நீலிமலைக் கடந்து, கரிவனம் தாண்டி, ''**கட்டனைக்**'' (மணிகண்டனை) கண்டெடுத்த பம்பையில் நீராடி பாவவினை தீர்க்க, படிகள் பதினெட்டைத் தாண்டி பரத்திற்கும் இகத்திற்கும் பரம் பொரு ளாய் விளங்கும் ஐயப்ப சுவாமியைக் காண முக்கோடி தேவர் களும் முனைந்து வந்துள்ள பாமரர்களும் அத்திருநாளிலே தரிசிக்கிறார்கள் எனில், அதனை என்னென்று எழுதுவது?

உண்மையிலேயே, ஒருவர் இவ்வரிய நோன்பினை கொண்டொழுகி, ஓர்முறை இதனைக் காண்பார்களேயானால் அவர்கள் மறுமுறை காணுதிருக்க மாட்டார்கள். இகத்தில் செய்யும் வினைகளை, இங்கேயே போக்கி பரத்திற்கு பரிசித்த ஞைகச் செல்வார்கள்.

## பதினெட்டாம் படி

எக்கோயில்களிலும் சுவாமி சன்னிதானத்தில் 18 படிகள் இருக்க முடியாது. ஆனுல் ஐயப்பன் கோவிலில் மாத்திரம் 18 படிகள் ஓர் விசேஷமாக அமைந்துள்ளது. இப்பதினெட்டு படிகளும், பஞ்சேந்தியரங்களையும், எட்டுராகங்களையும், மூன்று குணங்களையும், வித்தியா, அவித்தியா இவைகளை உணர்த்துகின்றன. நோன்பு கொண்டுள்ள நாட்களில் பரிசுத்தமாக இருப்பவர்கள்தான் இப்பதினெட்டுப் படிகளையும் சுலபமாகக் கடக்க இயலுமாம். முதல் வருடம் போகின்றவர்கள் முதற்படியில் தேங்காய் உடைத்து, முதற்படியில் வலதுகால் வைத்து ஏறுவார்கள். அவ்வாறே அவர்கள்'செல்லும் யாத்திரையின் கணக்குப்படி படிகள் மாற்றி தேங்காய் உடைப்பார்கள், இப்படிகள் ஓர் சமமான இடத்தில் 10 கஜ உயரத்தில் அமைந்துள்ளது.

## சன்னிதானம் அடைந்த பின்

1 நெய் அபிஷேகத்திற்கு ரசீது வாங்கிச் செல்ல வேண்டும்.

2 அபிஷேகம் செய்த நெய்யில் சிறிது பிரசாதமாகப் பெறுகிருர்கள்.

3 அவரவர்கள் வேண்டுதல்படி காணிக்கையைச் செலுத்துகிருர்கள்.

4 நெய் அபிஷேகம் செய்தபின் நெய் ஊற்றி கொண்டு வந்த தேங்காய் மூடியில் ஒன்றை அங்குள்ள பிள்ளையார் சன்னிதியிலுள்ள ஹோம குண்டத்தில் போடுகிருர்கள்.

5 அங்கு விற்கும் அப்பம், பாயசம், பஞ்சாமிர்தம் முதலியவைகளை விலை கொடுத்து வாங்குகிறார்கள்.

6 இடது பக்கமுள்ள முருகனையும் வழிபாடு செய்கிறார்கள்.

7 கட்டு எடுத்த நாள்முதல் தீபாராதனை செய்து மிகுந்துள்ள கற்பூரத்தை சன்னிதானத்தின் முன் உள்ள கற்பூர குண்டத்தில் போடுகிறார்கள்.

8 பிறகு மஞ்ச மாதா (மகாளிப்புரத்து அம்மன்) சன்னிதிக்கு போகிறார்கள். இது பதினெட்டாம் படியினின்று $\frac{1}{2}$ மைல் தூரத்திலுள்ளது. இங்கே தேங்காயை உடைக்காமல் உருட்டி விடுகிறார்கள். வெற்றிலை அடுக்காக தூவிவிடுகிறார்கள். மஞ்சள் பொடியைத் தூவுகிறார்கள். அங்க பிரதக்ஷணம் செய்பவர்களும் உண்டு.

9 பின்கடுத்த சுவாமி கோவிலுக்கு வந்து வழிபாடுகள் நடத்துகிறார்கள்.

10 பதினெட்டாம் படியின் வடக்கே உள்ள கருப்பன் சுவாமிக்கு முந்திரிப்பருப்பு, கற்கண்டு நைவேதனம் செய்து வழிபடுகிறார்கள்.

11 பிறகு பஸ்ம குளத்தில் வடபாகத்திலுள்ள நாகராஜனையும், நாகயட்சியையும் வழிபடுகிறார்கள். இங்கும் மஞ்சள்பொடி தக்ஷிணைப் பணம் வைத்து கற்பூரம் ஏற்றுகிறார்கள்.

12 அதன்பின் பதினெட்டாம் படியின் கீழேயுள்ள வாவரு சுவாமியையும் தரிசிக்கிறார்கள். அருகேயுள்ள பஸ்ப குளத்தில் அசுத்தம் செய்யாமல் நீராடுகிறார்கள்.

சுவாமியின் அலங்காரத்திற்காக ஆபரணங்கள் பெட்டியில் பந்தள மகாராஜனிடமிருந்து தை விளக்கிற்கு (மார்கழி 30ந் தேதி) மாலையில் கொண்டு வரப்படுகிறது. இப்பெட்டியை நோன்புகொண்டவர் தலையில் தாங்கி துள்ளித் துள்ளி ஏறிவருவார். அவர் தன்சுய உணர்வு இல்லாமலே வருகிறார்

என்றே சொல்லவேண்டும். பெட்டியை கீழே வைத்ததும், அவர் உணர்வற்று விடுகிறார். பிறகு சுவாமிக்கு ஆபரணம் எல்லாம் அலங்கரித்தபின் தீபாராதனை ஆன பின்தான் பெட்டியைக் கொணர்ந்தவர் உணர்வு பெற்று எழுகிறார்.

அலங்காரம் செய்தபின் ஐயப்பனைக் காண அவ்வளவு அழகாக இருக்கும். அப்போது குழுமியிருக்கும் பக்தர்கள் ஒரே நேரத்தில் சரணம் சொல்லுதலும், மணியோசையும் ஆனந்தத்தில் மூழ்கச் செய்கின்றனர்.

## தை விளக்கு

41 நாள் நோன்புகொண்டு சபரி செல்லும் பக்தர்கள் தை விளக்கைப் பாராமல் வருவதில் பிரயோஜனமில்லை என்று முன்னோர் வாக்கு. திருவிழாவின் கடைசிநாள் வனதேவதை களுக்கு கிரமப்படி பூஜை முடிக்கிறார்கள். அதேபோல் மார்கழி 30-ந்தேதி தீபாராதனை சமயத்தில் ஐய்யப்பனுடைய இருப்பிடத்தில் தேவர்களும், முனிவர்களும் ஆராதனை செய் கிறார்களாம். அன்று அதே வேளையில் வடகிழக்காக சரணம் சொல்லி வணங்கும் பக்தர்களுக்கு அந்த திவ்ய ஜோதி தெரிகிறது.

நோன்பினை சரியாக ஏற்று நடத்தாதவர்களுக்கும், நம்பிக்கை இல்லாதவர்களுக்கும் அந்த ஜோதி தெரிவ தில்லையாம். ஐயப்பன் பிறந்தது மார்கழி 30-ந்தேதி. ஆகையால் தை விளக்கு இவ்வளவு முக்கியத்துவம் ஆகும்.

தெரிந்தும் தெரியாமலும் செய்த சகல குற்றங்களையும் பொறுத்துக் காத்து இரக்ஷிக்கவேண்டும் ஓம் சபரிமலை அரிஹர சுதன் ஐயனய்யப்ப சுவாமியே சரணம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | அச்சங்கோவில் அப்பனே | சரணம் | பொன்னய்யப்பா |
| 2. | அகண்ட வடிவமே | ,, | ,, |
| 3. | அகக் கடவுளே | ,, | ,, |
| 4. | அகிலாண்டேச்வரி புத்ரா | ,, | ,, |
| 5. | அஷ்ட காளி மகனே | ,, | ,, |
| 6. | அனுக்ரதேவி சுதா | ,, | ,, |

| | | | |
|---|---|---|---|
| 7. | அகில நாயகனே | சரணம் | பொன்னய்யப்பா |
| 8. | அச்சந் தவிர்ப்பவனே | ,, | ,, |
| 9. | அடியார் துயரகற்றும் | ,, | ,, |
| 10. | அன்னவாகனன் மகனே | ,, | ,, |
| 11. | அன்பர்க்கு அன்பனே | ,, | ,, |
| 12. | அகோர வீரபத்ரன் தம்பியே | ,, | ,, |
| 13. | ஆரியங்காவு வாசனே | ,, | ,, |
| 14. | ஆறுமுகன் தம்பியே | ,, | ,, |
| 15. | ஆசை அகற்றுவோனே | ,, | ,, |
| 16. | ஆண்டியப்பன் தம்பியே | ,, | ,, |
| 17. | ஆதி பராபரனே | ,, | ,, |
| 18. | ஆதி தேவன் மகனே | ,, | ,, |
| 19. | ஆதி நாராயணனென்றவனே | ,, | ,, |
| 20. | ஆபத் பாந்தவனே | ,, | ,, |
| 21. | ஆயிரங்கண்ணன் போற்றும் | ,, | ,, |
| 22. | ஆலமுண்டவன் மகனே | ,, | ,, |
| 23. | ஆறுபடை வீடுடையோன் தம்பியே | ,, | ,, |
| 24. | ஆனைமுகன் தம்பியே | ,, | ,, |
| 25. | ஆற்றலைக் கொடுப்பாய் | ,, | ,, |
| 26. | ஆனந்த ரூபனே | ,, | ,, |
| 27. | இமையவான் மகனே | ,, | ,, |
| 28. | இச்சா சக்தி மகனே | ,, | ,, |
| 29. | இடரைத் தீர்ப்பவனே | ,, | ,, |
| 30. | இமையவல்லி மகனே | ,, | ,, |
| 31. | இரக்கம் மிகுந்தவனே | ,, | ,, |
| 32. | இருமுடி சுமந்து வந்தோம் | ,, | ,, |
| 33. | இருமுடிப் பிரியனே | ,, | ,, |
| 34. | இளநீர்ப் பிரியனே | ,, | ,, |

35. இறைவன் அருமைமைந்தா சரணம் பொன்னய்யப்பா
36. இன்பத்தின் இன்பமே ,, ,,
37. இன்சொல் கூறுவோம் ,, ,,
38. ஈசுவரன் மகனே ,, ,,
39. ஈடில்லாத் தெய்வமே ,, ,,
40. உத்தமி புதல்வனே ,, ,,
41. உண்மை உயர்த்துவோனே ,, ,,
42. உலகைக் காப்பவனே ,, ,,
43. உனது தாளை நினைந்தோம் ,, ,,
44. ஊழ்வினை அகற்றி விடு ,, ,,
45. ஐம்பூதத்திற் காதியே ,, ,,
46. ஐயந் தவிர்ப்பவனே ,, ,,
47. ஐயப்ப தெய்வமே ,, ,,
48. ஒற்றுமை ஓங்கச் செய்வாய் ,, ,,
49. ஓங்காரப் பொருளே ,, ,,
50. கண்டெடுத்த மணிகண்டா ,, ,,
51. கற்பூரப் பிரியனே ,, ,,
52. காட்டில் கிடைத்தவனே ,, ,,
53. மஞ்ச மாதா போற்றிய ,, ,,
54. ஷண்முகன் தம்பியே ,, ,,

## சபரிமலை வீற்றிருக்கும்

# ஸ்ரீ ஐயப்ப மூர்த்தியின் மகத்துவ விளக்கம்

**சபரிமலை:** மேற்குத் தொடர்ச்சி மலையின் தென் கோடியில் உயர்ந்ததோர் பீடப் பிரதேசத்தில் அமைந்துள்ளது. பல அடுக்குக் குன்றுகளையும், புல்வெளிகள், காடடர்ந்த வனங்கள், ஏற்றமும் இறக்கமுமான ஒற்றையடிப்பாதைகள் நிறைந்த குறுக்கங்கள், நதிகள், சுனைகள், பசுமை நிறைந்த

பார்வைக்கினிய பல காட்சிகள், யானை புலிகள் பொதிந்த மரச் செறிவுள்ள பகுதிகள், விஷஜந்துக்கள் வதியும் புதர்கள், வான் தொட்டுப் பறக்கும் பக்ஷி இனங்கள் ; இவையெல்லாமாயிருந் தும், மனித சஞ்சாரமற்றதும், இத்தனைக்கும் இடையே இனி மையும் அமைதியும் நிறைந்ததுமாகும் ஸ்ரீ ஐயப்பன் வீற்றிருக் கும் இச் சபரிமலை.

இதில் பிரவகிக்கும் பம்பை நதியை புனிதம் வாய்ந்த கங்கை நதியோடு ஒப்பிடுவதுண்டு. வளத்தில் கைலையை யொத்திருப்பதாலும், மஹேஸ்வர புத்திரன் இதிலுள்ள நீலி மேட்டில் இருக்கை கொண்டிருப்பதாலும் இச்சபரிமலையை தென் கயிலையென்றும் சிறப்புறக் கூறுவர்.

நீலிமலை யென்றும், தென் கயிலையென்றும் வழங்கிவரும் சபரிமலையானது, மதுரை ஜில்லாவின் தென் மேற்குப் பகுதியும், திருவிதாங்கூரின் வடகோடும் சந்திக்கும் பிரதேசத்தில், திருவி தாங்கூரின் எல்லையுள் அமைந்துளது. பண்டைக் காலத்திலோ, இது பாண்டிய ராஜ்யத்தின் பல பிரிவுகளில் ஒன்றாகவும், ராஜ சேகரன் என்ற பாண்டிய குல மன்னனால் ஆளப்பட்டு வந்தது மாக இருந்த பந்தள நாட்டின் எல்லைக்குட்பட்டு மிருந்தது.

வளத்தில் கயிலையை யொத்த, மனித சஞ்சாரமற்ற, கடும் புலிகள் வாழும், காடடர்ந்த, இச்சபரிமலையின் மத்தியில், பொன்னம்பலத்தில் இருக்கைகொண்டு தன்னைக் காண வரும் பக்தர்களுக்குக் கடாக்ஷமளித்து வரும் மூர்த்தியே, தர்ம சாஸ் தாவின் சாக்ஷாத் அவதாரமான கலியுக வரதன் ஸ்ரீ ஐயப்ப னாகும். கருணைப் பிரவாகத்தால் பக்தர்களைப் பரவசிக்கச் செய்யும் ஸ்ரீ ஐயப்பனை, அடியார்கள் அன்பின் மிகுதியாலும், பொருந்தும் பல சிறப்புக்களாலும் அனேகம் பெயர் கொண்டு அழைக்கின்றனர்.

சுர அசுரர்கள் அமுதெடுக்கத் திருப்பாற்கடல் கடைந்த காலம். மகா விஷ்ணுவின் மோஹினி அவதாரத்தில் ஜனித்த ஹரிஹர புத்திரனே கேரள நாட்டில் சாஸ்தா என்றும், தமிழ் நாட்டில் ஐயனார் என்றும் போற்றப்பட்டு வரும் வைராக்கிய மூர்த்தி என்பதைப் பலருமறிவர். இந்த மோஹினீ சுதனே தன் தந்தையாகிய மகேஸ்வரனின் ஆணைக்கிணங்க மணி முத்தாரமணிந்து, குழந்தை வடிவிலமைந்து, பந்தள மன்னன் வேட்டைக்கு வரும்போது காட்டில் தென்பட்டு, அந்தணர் நல்லாசியுடன் அரண்மனைக் கெடுத்துச் செல்லப்பட்டு அரசி யின் அன்புக்கும் பாத்திரனாகி அனவரதமும் பேணி வளர்க்கப் பட்டு வந்தான்.

திவ்ய தேஜஸுடன் விளங்கிய இம் மணி கண்டன் உரிய காலத்தில் கல்வி கேள்விகளிலும், வில், வேல், வாள் முதலிய அரசர்க்குரிய அரிய பயிற்சிகளிலும் தேறிப் பலராலும் பாராட்டப்பட்டு வந்தான். மணி கண்டன் அரண்மனையடைந்த இரண்டொரு வருடங்களில் அரசிக்கும் ஒரு ஆண் மகவு பிறக்கவே இரு குழந்தைகளும் இரு கண்மணிகள் போலவே பேணப்பட்டும் பரஸ்பர அன்பு திகழவும் வளர்ந்து வந்தன.

இப்படி இவ்விரு குழந்தைகளும் வளர்ந்துவரும் காலத்தில், வயது முதிர்ந்து வந்த மன்னன் மணிகண்டனுக்கு மகுடம் சூட்ட விரும்புவதாகக்கூறி ஆவன செய்யுமாறு அமைச்சருக்கு ஆணையிட்டான். பட்டத்தரசியின் மணி வயிற்றிலுதித்த மகனிருக்க, காட்டிலிருந்து கண்டெடுக்கப்பட்ட அனாதைச் சிறுவன் நம்மை ஆளவும், நாம் சேவிக்கவுமா என்று அழுக்காறு கொண்ட அமைச்சன் ஒருவன், ராமனுக்குக் கூனி வாய்த்தது போல் தோன்றி, சதி புனைந்து ராணிக்குத் தீராத் தலைவலி யென்றும், புலிப்பால் வேண்டும் என்றும் கோருமாறு செய்தான்.

புலிப்பால் பெற்றுவரும் ஆற்றல் படைத்த வல்லவன் எவனோ என்று அரசன் கிலேசமுற்று மயங்கிவாட, வைராக்கிய சித்தனும், மஹா வீரனும், தியாகமூர்த்தியும், பற்றற்ற சேவையாளனுமான ஐயன் ஐயப்பன், பதினான்கு வயதுக்கு உட்பட்ட பிராயத்தினனேயாயினும் தாம் சென்று புலிப்பால் கொண்டு வருவதாகவும் தமக்கு ஆக்ஞையாக வேண்டும் என்றும் விழைந்தான். அரசனும் ஒருவாறாக இணங்கி சேனா சகாயத்துடன் மணிகண்டனை அடவிக்கனுப்ப இசைந்தான்.

சேனைக் கூட்டங்களுடன், புலிகளிடம் செல்வது அநுசிதம் என்றும், தான் தனியாகவே சென்று சமாளித்து வெற்றியுடன் திரும்புவதாக உத்திரவாதமளித்துச் சென்ற மணிகண்டனை, மகிஷமுக அரக்கியின் சம்ஹாரத்துக்காக எதிர் பார்த்துக் கொண்டிருந்த தேவர்கள் ஏற்று சபரி கிரியில் பொன்னம்பலத்தில் இருத்திப் போற்றித் தம்மை எருமை முகத்தரக்கியிடமிருந்து காத்து ரக்ஷிக்க வேண்டும் என்று இறைஞ்சினர்.

நல்லோரை நசுக்கி வந்த அரக்கியையும் அழித்து சாபத் தீட்டால் மகிஷமுகம் பெற்று இவ்வாறு அரக்கியாய்த் திரிந்து

அலைந்த தத்தாத்ரேயர் பத்னியான லீலா தேவிக்கும் ஜன்ம சாபல்யமளித்து, அரசன் ஆணையை நிறைவேற்றுவதற்காக, புலிப்பாலென்ன, புலிக் கூட்டம் முழுதையுமே, பூனைக்கூட்டம் போல் அமைதியாய் அரண்மனை நோக்கி அழைத்து வந்து, அன்னையாகிய அரசிபால்சென்று பணிந்தனன் யௌவன மணி கண்டனும், மெய்யப்பனுமான கருணாமூர்த்தி கலியுக வரதன் ஸ்ரீ ஐயப்பன்.

புலிக் கூட்டம், பசுக்கூட்டம் எனப் பின்தொடர வந்த ஐயன் ஐயப்பனின் மகிமையை இப்போதுதான் உணர்ந்த மன்னனும் மகாராணியும், மன்னிப்புக்கோரி, அரசை ஏற்று ஆளுமாறு கெஞ்சினர். கருணாமூர்த்தியான ஐயன், பற்றற்றான், தன் கடன் பணி புரிதலேயன்றி, அரசு புரிதலல்லவென்றும், அப்பதவியை அன்பு கொண்டே மறுப்பதாகவும்கூறி, அன்னை யின் விருப்பத்திற்கேற்ப, தம்பியே அரசாளவும், தான் மலையில் வீற்று, பந்தளம்மட்டுமல்ல, இந்த மண்டலம் முழுதையுமே அன்பினால் ஆதரிப்பதாகவும் அருளி மீண்டும் தன் கணங் களுடன் மலைக்கேகினன்.

இந்த மலைக்குச் செல்லுபவர் எளிதில் சென்றுவரக் கடின விரதங்கள் ஏற்பர். இக் கடினவிரதங்களால் வழிநடையும் பொழுது போக்கும் எளிதாவதுடன், பக்திப் பிரவாகமும் பெருகுகிறது. எங்கு நோக்கினும் எளிய காட்சியும், இனிய குரல்களும், சமத்துவ நிலையும், சாந்தாகாரமும் பரஸ்பர அன்பும் பரவி நிற்கும். படித்தவர் பாமரர் என்ற அகந்தையோ, பணக்காரர் ஏழை என்ற செருக்கோ, ஜாதிமத வித்தியாசங் களோ, இளையோர் முதியோர் என்ற பாகுபாடோ கிடையாது. எல்லோரும் இச்சந்நிதியில் ஐயப்பனேயாவர். ஒருவரை மற் றொருவர் ஐயப்பன் என்றே அழைப்பர். அவரவர் தனிப்பெயர் அல்லது உறவு முறைகொண்டு அழைப்பதில்லை.

## மலை அமைப்பும் செல்லும் விவரமும்

சபரிமலையிலுள்ள நீலிமேடு சென்றடைய மூன்று பிரதான பாதைகள் உண்டு.

1. தலைப்பாறை வழி
2. ஏரிமேலி வழி
3. வண்டிப்பிரியாறு சென்று சத்திரம் வழி

**தலைப்பாறை வழி :** லாகை எஸ்டேட்டு மார்க்கமாகப் பம்பையாறடைந்து நீலி மேட்டைச் சேருகிறது. 30 மைல் கால் நடைப்பாதை. இதில் ஸ்ரீ ஐயப்பனுக்கு உற்சவ காலங்களில் செல்லும் திருவாபரணங்கள் தவிர சாதாரணமாக பக்தர்கள் அதிகமாகச் செல்வதில்லை.

கோட்டயத்திலிருந்து ஏரிமேலி சென்று அங்கிருந்து 30 மைலுக்கு மேல் கால் நடையாகப் பல ஏற்ற இறக்கமான பாதைகளைத் தாண்டி வசதியுள்ள இடங்களில் தங்கி, இளைப்பாறி, உண்டு, உறங்கி, மீண்டும் எழுந்து சென்றும் இவ்வாருக 3 தினங்களில் பம்பையாற்றைக் கடந்து நீலி மேடு சென்றடைவர். இது கேரள நாட்டின் மத்தியிலமைந்த பாதையாயிருப்பதால், இதில் பெரும்பாலும் கேரள மக்களே செல்கின்றனர்.

மூன்ருவது பாதையே தமிழ் நாட்டவர்க்கு சுலபமும் அதிக காலவிரையமும், பொருள் விரையமுமின்றி செல்லத் தக்கது. வண்டிப் பிரியாறு சென்று சத்திரம் என்று கூறப்படும் சபரிமலையடிவாரத்திலிருந்து மேடும் கோடும், ஏற்றமும் இறக்கமுமான 8 மைல் கடினப் பாதையைக் கடந்து நீலி மேட்டை 4 மணி முதல் 6 மணி நேரத்தில் சென்றடைவர். இப் பாதையில் செல்லுபவர் நீலி மேட்டிலிருந்து 3 மைல் கீழே இறங்கியே பம்பை நீராடி வருவர். இந்தப் பாதையில் செல்லும் 8 மைல் நடையைக் கடினத்தால் எரிமேலிப் பாதையின் 30 மைல் நடைக்குச் சமமென்பர்.

எனினும் எந்தப் பாதையில் சென்ருலும், பக்தர்கள் ஒரே லக்ஷியத்துடனும், பக்தி மேலீட்டாலும், பரஸ்பர அன்புடனும், துவேஷாதி துர்க்குணங்களை மறந்து கோபமற்ற சாந்த மூர்த்திகளாய், மோஹினிசுதனின் திருநாமங்களையும், திருக்குணங்களையும் போற்றிக்கொண்டே செல்வதாலும், வழிநடை தெரியாமல் வந்து சேருவது அநுபவத்தால் அறியத்தக்கது. இங்கு செல்லும் பக்தர்கள் நாற்பத்தொருநாள் நல்விரதமிருந்து துளப மாலை யணிந்து, திரிகரண சுத்தியுடன் திருநாமத்தை பஜித்து, மது மாம்சம், மனையுறவு நீக்கி, எளிய உணவும், இனிய சொற்களையும் கொண்டோராய், இருமுடி தாங்கிக் கால் நடையாக மலையடிவாரத்திலிருந்து புறப்பட்டு சுத்தமான இடங்களில் தங்கிச் சென்று, பந்தள மன்னனின் மகனுயிருந்து பரம குருவாகிய சாந்தமூர்த்தி சபரிமலை ஐயப்பனைத் தரிசித்து வரவேண்டும் என்பது நியதி.

பக்தர்கள் இருமுடி, வெறுமுடி யென்றிருவகை முடி கொண்டு செல்வதுண்டு. இதில் இருமுடி தரித்தோர் நீலி மேட்டுச் சந்நிதிக்கு நேராகச் செல்லும் 18-ம் படியில் ஏறிச் சென்று தம் காணிக்கையைச் செலுத்திக் கடாக்ஷம் பெறுவர்.

வெறுமுடி தரித்தோர் தம் தேவைப் பொருள்களை மட்டிலும் ஒரு முடியாகக் கட்டிச் சுமந்து பக்கவாட்டிலமைந்துள்ள படிகள் வழியாகச் சென்று சந்நித்யில் தரிசனம் பெற்றுத் திரும்புவர்.

இருமுடியில் ஒரு முடி தன் தேவைப் பொருள்களும், மறுமுடி ஐயப்பனுக்குக் காணிக்கைப் பொருள்களும் கொண்டதாகும்.

வெறுமுடி தன் தேவைப் பொருள்களை மட்டிலும் கொண்டதாகும்.

குறிப்பு: இந்த மலையில் தங்குவதற்கு விடுதிகளோ வேறு கடைகளோ கிடையாதாதலால் யாத்ரீகர்கள் தங்கள் தேவைப் பொருள்களைத் தாங்களே எடுத்துச் செல்ல நேரிடுகிற தென்பதை அன்பர்கள் அறிக.

இங்கு செல்பவர் பெரும்பாலும் காவி அல்லது ஏதாவது ஒரு சாயம் நனைத்த ஆடைகளே அணிந்து செல்வர். அழுக்குத் தெரியாமலிருப்பதற்கும், யாத்ரீகர்களும் விரதத்திலுள்ளவர்களுமான இவர்களைப் பிறர் எளிதில் அறிந்து கொள்வதற்கும் இந்த சாயம் தோய்த்த உடை உதவுகிறது.

## ஸ்ரீ ஐயப்பனின் சூக்ஷம விளக்கம்

---

*ஸ்ரீ ஐயப்பன் மோஹனி சுதன்-ஹரிஹர புத்ரன்*
*மோஹினி-சாஹஸமயம்*
*சிவன்-சக்திமயம்.*

ஹரிஹர சம்யோகம் என்பது சாஹசமும் சக்தியும் ஐக்கியமாவது. இந்த ஐக்கியத்திலுதித்ததே சாந்தம் நிறைந்த வைராக்யமூர்த்தி, தீரமும் தியாகமும் ஒன்று சேர அன்புருவாயமைந்த ஸ்ரீ ஐயப்பன்.

# ஸ்ரீ மஹாசாஸ்தா அனுக்ரஹ கவசம்

ஸ்ரீதேவ்யுவாச —

பகவன் தேவதேவேஶ ஸர்வக்ஞ த்ரிபுராந்தக |
ப்ராப்தே கலியுகே கோரே மஹாபூதை : ஸமாவ்ருதே ||
மஹாவ்யாதி மஹாவ்யாள கோரராஜை : ஸமாவ்ருதே
து : ஸ்வப்னஶோகஸந்தாபை : துர்வினீதை :
ஸமாவ்ருதே || 2

ஸ்வதர்ம விரதே மார்கே ப்ரவ்ருத்தே ஹ் ருதிஸர்வதா
தேஷாம் ஸித்திம் ச முக்திம் ச த்வம் மே ப்ரூஹி
வ்ருஷத்வஜ || 3

ஈஶ்வர உவாச —

ஶ்ருணு தேவி மஹாபாகே ஸர்வகல்யாணகாரணே |
மஹாஶாஸ்துஶ்ச தேவேஶி கவசம் புண்யவர்தனம் ||
அக்னிஸ்தம்ப ஜலஸ்தம்ப ஸேனாஸ்தம்ப விதாயகம்
மஹாபூத ப்ரஶமனம் மஹாவ்யாதி நிவாரணம் || 5

மஹாக்ஞானப்ரதம் புண்யம் விஶேஷாத்கலிதாபகம் |
ஸர்வரக்ஷோத்தமம் பும்ஸாம் ஆயுராரோக்யவர்தனம்
கிமதோ பஹுனோக்தேன யம்யம் காமயதே த்விஜ : |
தம் தமாப்னோத்யஸந்தேஹ : மஹாஶாஸ்து :
ப்ரஸாதனாத் || 7

கவசஸ்ய ருஷிர்ப்ரம்மா காயத்ரீச்சந்த உச்யதே |
தேவதா ஸ்ரீமஹாஶாஸ்தா தேவோ ஹரிஹராத்மஜ : ||
ஷடங்கமாசரேத்பக்த்யா மாத்ரயா ஜாதியுக்தையா |
த்யானமஸ்ய ப்ரவக்ஷ்யாமி ஶ்ருணுஷ்வாவஹிதாப்ரியே

அஸ்யஸ்ரீ மஹஶாஸ்து : கவச மந்த்ரஸ்ய ப்ரம்மா ருஷி :, காயத்ரீச்சந்த :, மஹாஶாஸ்தா தேவதா || ஹ்ராம் பீஜம் || ஹ்ரீம் ஶக்தி : || ஹ்ரூம் கீலகம் || ஸ்ரீமஹாஶாஸ்து : ப்ரஸாத ஸித்யர்த்தே ஜபேவினியோக : || (ஹ்ராமித்யாதி ந்யாஸ :)

த்யானம் :

தேஜோ மண்டல மத்யகம் த்ரிநயனம்
திவ்யாம்பராலங்க்ருதம்
தேவம் புஷ்பஶரேக்ஷுகார்முக
லஸன்மாணிக்ய பாத்ராபயம் |

பிப்ராணம் கரபங்கஜை : மதகஜ-
ஸ்கந்தாதி ரூடம் விபும்
ஶாஸ்தாரம் ஶரணம் பஜாமி ஸததம்
த்ரைலோக்ய ஸம்மோஹனம் ||

மஹாஶாஸ்தா ஶிர : பாது பாலம் ஹரிஹராத்மஜ : |
காமரூபித்ருஸம்பாது ஸர்வஜ்ஞோ மே ஷ்ருதிம் ஸதா
க்ராணம் பாது க்ருபாத்யக்ஷ|: முகம் கௌரீப்ரிய : ஸதா
வேதாத்யாயீ ச மே ஜிஹ்வாம் பாது மே சிபுகம் குரு :
கண்டம் பாது விஶுத்தாத்மா ஸ்கந்தௌ பாது
ஸுரார்சித : |
பாஹூ பாது விரூபாக்ஷ : கரௌது கமலாப்ரிய : || 12

பூதாதிபோ மே ஹ்ருதயம் மத்யம் பாது மஹாபல : |
நாபிம் பாது மஹா வீர : கமலாக்ஷோSவது கடிம் || 13

ஸனீபம் பாது விஶ்வேஶ : குஹ்யம் குஹ்யார்தவித் ஸதா |
ஊரூ பாது கஜாரூட : வஜ்ரதாரீ ச ஜானுனீ || 14

ஜங்கே பாத்வங்குஶ தர : பாதௌ பாது மஹாமதி : |
ஸர்வாங்கம் பாது மே நித்யம் மஹாமாயாவிஶாரத : ||
இதீதம் கவசம் புண்யம் ஸர்வாகௌகநிக்ருந்தனம் |
மஹாவ்யாதி ப்ரஶமனம் மஹாபாதகநாஶனம் || 16

ஜ்ஞானவைராக்யதம் திவ்யம் அணிமாதிவிபூஷிதம் |
ஆயுராரோக்யஜனனம் மஹாவஶ்யகரம் பரம் || 17

யம் யம் காமயதே காமம் தம் தமாப்னோத்யஸம்ஶய : ||
த்ரிஸந்த்யம் ய : படேத்வித்வான் ஸயாதி பரமாம் கதிம்
இதி ஸ்ரீகுஹ்யரத்ன சிந்தாமணௌ ஸ்ரீமஹாசாஸ்து :
அனுக்ரஹகவசம் நாம ஸப்தம : படல : ஸமாப்த :

## ஸ்ரீ தர்ம சாஸ்தாவின் ஸ்துதி தசகம்

ஆஶானுரூபபலதம் சரணாரவிந்த
பாஜாமபார கருணார்ணவ பூர்ணசந்த்ரம் |
நாஶாய ஸர்வவிபதாமபி நௌமி நித்ய -
மீஶான கேஶவ புவம் புவனைகநாதம் || 1

பிஞ்சாவளீ வலயிதா கலிதப்ரஸூன
ஸஞ்சாதகாந்தி பரபாஸுரகேஶபாரம் |
ஶிஞ்ஜானமஞ்ஜுமணிபூஷணரஞ்ஜிதாங்கம்
சந்த்ராவதம்ஸ ஹரிநந்தனமாஶ்ரயாமி || 2

ஆலோல நீல லஸிதாலகஹாரரம்ய-
மாகம்ரநா ஸமருஞ்தரமாயதாக்ஷம் |
ஆலம்பனம் த்ரிஜகதாம் ப்ரமதாதிநாத-
மானம்ரலோக ஹரிநந்தனமாஶ்ரயாமி || 3

கர்ணாவலம்பி மணிகுண்டல பாஸமான-
கண்டஸ்தலம் ஸமுதிதானன புண்டரீகம் |
அர்ணோஜநாபஹரயோரிவ மூர்திமந்தம்
புண்யாதிரேகமிவ பூதபதிம் நமாமி || 4

உத்தண்டசாருபுஜதண்ட யுகாக்ரஸம்ஸ்த
கோதண்டபாணமஹிதாந்தமதாந்தவீர்யம் |
உத்யத்ப்ரபாபடலதீப்ரமதப்ரஸாரம்
நித்யம் ப்ரபாபதிமஹம் ப்ரணதோ பவாமி ||

மாலேயபங்க ஸமலங்க்ருத பாஸமான-
தோரந்தராள தரளாமல ஹாரஜாலம் |
நீலாதி நிர்மல துகூலதரம் முகுந்த
காலாந்தக ப்ரதிநிதிம் ப்ரணதோஸ்மி நித்யம்

யத்பாதபங்கஜயுகம் முனயோப்யஜஸ்ர-
பக்த்யா பஜந்தி பவரோகநிவாரணாய |
புத்ரம் புராந்தகமுராந்தகயோருதாரம்
நித்யம் நமாம்யஹ மமித்ரகுலாந்தகம் தம் ||

காந்தம் கலாய குஸுமத்யுதி லோபனீய-
காந்திப்ரவாஹ விலஸத் கமனீயரூபம் |
காந்தாதனூஜஸஹிதம் நிகிலாமயௌக-
ஶாந்திப்ரதம் ப்ரமதநாதமஹம் நமாமி || 8

பூதேஶ பூரிகருணாம்ருத பூரபூர்ண-
வாராம்நிதே வரத பக்தஜனைக பந்தோ |
மாயாத் பவான் ப்ரணதமேனமபாரகோர-
ஸம்ஸார பீதமிஹமாமகிலாமயேப்ய: || 9

ஹே பூதநாத பகவன் பவதீயசாரு-
பாதாம்புஜே பவது பக்திரசஞ்சலாமே |
நாதாய ஸர்வ ஜகதாம் பஜதாம் பவாப்தி-
போதாய நித்யமகிலாங்க புவே நமஸ்தே ||

இதி ஸ்ரீதர்ம சாஸ்தாவின் ஸ்துதி தசகம் ஸமாப்த :

# ஸ்ரீ மஹாசாஸ்து : ஸ்துத்யஷ்டகம்

ஶிதிஹயமதிருஹ்ய ஸஞ்சரந்தம்
ஶ்ரிதஜன சிந்திதபூரணே ப்ரவ்ருத்தம் ।
ஹிதகர மனிஶம் ஸதாம் மஹாந்தம்
ஸததமஹம் ப்ருஹதீஶ்வரம் ப்ரபத்யே ॥

ஹரிஹரதனுஸம்பவம் ஸுபூர்ணம்
ஸுரமுனிசித்தஜனைஶ்ச வந்த்யமானம் ।
வரஸிதமதவாரணேந்த்ரயானம்
ஸததமஹம் ப்ருஹதீஶ்வரம் ப்ரபத்யே ॥ 2

வன புவி ம்ருகயாம் ஸதா சரந்தம்
தனுஜாகுலாந்தகரோத்யதோரு குந்தம் ।
கனகமணி விசித்ர பூஷணம் தம்
ஸதத மஹம் ப்ருஹதீஶ்வரம் ப்ரபத்யே ॥ 3

ஶரதமலஸுதாம்ஶு பிம்பவக்த்ரம்
தரணிஸுதாகர வீதிஹோத்ர நேத்ரம் ।
ஸுரதருஸும பூஷிதோருகாத்ரம்
ஸதத மஹம் ப்ருஹதீஶ்வரம் ப்ரபத்யே ॥ 4

வன புவி ஸனகாதி ஸேவ்யமானம்
மனுஜவரை ரனிஶம் ப்ரபூஜ்யமானம் ।
ஜனனம்ருதி விஹீனதாம் ததானம்
ஸதத மஹம் ப்ருஹதீஶ்வரம் ப்ரபத்யே ॥ 5

ப்ரணவதரு விஹங்கமாதி தேவம்
குணமயஸம்ஸ்ருதி கானனைருதாவம் ।
கணபதி குஹ ஸன்னுத ப்ரபாவம்
ஸதத மஹம் ப்ருஹதீஶ்வரம் ப்ரபத்யே ॥ 6

ஸுரபரிப்ருட ஸேவிதாங்க்ரி யுக்மம்
குருமகிலாத்மத்ருஶாம் விஶுத்ததத்வம் ।
கிரிகுஹரதலேஸுஸன்னிவிஷ்டம்
ஸதத மஹம் ப்ருஹதீஶ்வரம் ப்ரபத்யே ॥ 7

அஜமமரணாதிபம் வரிஷ்டம்
கஜரிபு ப்ருஷ்டகதோரு ரத்னபீடம் ।
விஜிதமதனஸுந்தரம் கரிஷ்டம்
ஸததமஹம் ப்ருஹதீஶ்வரம் ப்ரபத்யே ॥ 8

